



நாகூர் மகாவித்துவான்

குலாம்காதிறு நாவலர்


பதிப்பு


வித்தியோதயப் பல்கலைக்கழகத்

தமிழ்த்துறைத் தலைவர்

ம. மு. உவைஸ் எம். ஏ.



முஸ்லிம் இலக்கியநிதி.

பாணந்துறை, இலங்கை.

மதுரைத்

தமிழ்ச்சங்கத்துப்

# புலவராற்றுப்படை



## மூலமும் உரையும்




ஆசிரியர் :

மகாவித்துவான்

வா. குலாம் காதிறு நாவலர்.





பதிப்பாசிரியர் :

வித்தியோதயப் பல்கலைக் கழகத்

தமிழ்த்துறைத் தலைவர்

ம. முகம்மது உவைஸ்.





இஸ்லாமிய இலக்கிய மன்றம்

''மர்களி'' ஹேனமுல்லை,

பாணந்துறை, இலங்கை


—o—

இந் நூலாசிரியர்



நாகூர், தர்கா மகாவித்துவான்

வா. குலாம் காதிறு நாவலர்.

# தோற்றுவாய்

அளவற்ற அருளாளன். அலகிலா அன்புடையோன். அகிலம் அனைத்துக்கும் அதிபதி. அடக்கி ஆள்பவன். அந்தரங்கங்களை அறிபவன். அன்னம் அளிப்பவன். அனுதாபமுடையவன். அதிகாரி. அனந்திரன். அரசாங்கமுடையவன். அனைத்தும் அறிந்தவன். அரிதினும் அரியவை அமைப்பவன். அண்மியோரின் அல்லல் அறுப்பவன். அகதிகள் அநாதைகள் அனைவருக்கும் அளி செய்பவன். அச்சம் அகற்றுபவன். அறிவூட்டுபவன். அல்லாஹுத் தஆலா.

ஆற்றல் மிக்கவன். ஆண்டவன். ஆலம் அடங்கலுக்கும் நாயகன். ஆதியானவன்.

இராஜன். இம்மை மறுமை இரண்டிலும் இதமான இகபர இன்பங்களை இவனியில் இருக்கும் இனியவருக்கு இலகுவாக்கும் பொருட்டு இறுதித்தூதர் (இ) றசூலுல்லாஹ் மூலம் இறைத்தவன். இறைவன். இஸ்லாத்தை இயற்றியவன். இணை துணையற்றவன். இறுமாப்புக் கொண்டவனை இழிவுபடுத்துபவன். இபாதத்துடைய இட்டமுடையோரை இரந்தேத்துவோரை இரட்சிப்பவன்.

ஈமான் கொள்ளப்படவேண்டிய ஈடிணையற்றவன். ஈடுபாடுடையோருக்கு ஈருலகிலும் ஈபவன். ஈகையினால் ஈடேற்றும் ஈட்டச் செய்பவன். ஈனவரான ஈனரையும் ஈர்க்கும் ஈர்ப்புடையோன்.

உருவமைப்பவன். உயர்த்துபவன். உகப்பவன். உயர்ந்தவன். உண்மையானவன். உயிர்ப்பிப்பவன். புதிதாய் உண்டாக்குபவன். உயர்ச்சி பெற்றவன். உஞற்றுவோருக்கு உதவுபவன். உலகம் உய்ய உம்மி நபியை உதாரண புருஷராய் உதிக்க உதவியவன். உலகோருக்கு உபகாரியாக உள்ளவன். உயிரை உரியமுறையில் உருவாக்குபவன். உலகருக்கு உணவளிப்பவன். உவப்புடையோரை உவப்பவன். உலக உவகையால் உள்ளழிந்து உழலுபவனை உறுத்துபவன்.

ஊக்கம் ஊட்டி ஊக்குபவன். ஊழி முதல்வன். ஊணழிப்பவன். ஊனவனின் ஊனக்கண்ணுக்கு அப்பாற்பட்டவன்.

எக்கசக்கம் எதுவுமில்லாமல் எகீன் (நம்பிக்கை) வைத்தற்குரியவன். எழுப்புபவன். எங்கும் தரிபாடானவன். எம்மை எச்சரிக்கும் எசமான். எஞ்ஞான்றும் எம்மான் என்று எடுத்

தேத்துவதற்குரியவன். எல்லாம் வல்லவன். எல்லாம் அறிந்தவன். எறும்புமுதல் எறும்பிவரை எல்லாவற்றையும் பாதுகாப்பவன்.

ஏகன். ஏத்துதலுக்குரியோன். ஏகத்துவத்தின் ஏந்தல். ஏய்ப்புக்காரரை ஏமாற்றுபவன். ஏற்புடைய ஏற்பாடுகளை ஏற்படுத்தும் ஏற்புடைக் கடவுள். ஏழை ஏற்போன் ஏனையோருக்கும் ஏற்றக் குறைச்சல் ஏற்படாதவாறு பார்த்துக் கொண்டு இருப்பவன்.

ஐம்பது வேளையை ஐவேளையாக்கித் தந்தவன். ஐந்தடக்கி ஐயந்திரிபற ஐவேளையும் தொழுதல் வேண்டுமென்று விதித்தவன். ஐயோன். ஐம்புலன் அடக்க ஐங்கடமையையும் ஏற்று கொள்ளுமாறு கட்டளையிட்டவன்.

ஒஞ்சரி தீர்ப்பற்றவன். ஒடுக்கத்து நாளின் அதிபதி. ஒப்பற்றவன். ஒருவன். ஒப்புற ஒழுகப் பணிப்பவன். ஒளி. ஒருதனிப்பட்டவன். ஒரு பொருள். ஒவ்வோன். ஒன்றானவன்.

ஓசிவனம் வழங்குபவன். ஓதல்களை ஓதி ஓதி ஓங்குவோரை ஓம்புபவன். ஓரவாரம் அற்றவன்.

ஔடதமான ஔராதுகளை ஓதுவதற்குரியவன். ஔலாதுகளை அளிப்பவன். அவனுக்கே புகழ் அனைத்தும்.

அவன் அருளால் புலவராற்றுப்படை என்னும் இந்நூலை வெளியிடுகிறோம். நாகூர் தறுகா மகா வித்துவானுகக் கடமையாற்றிய குலாம் காதிறு நாவலர் அவர்களால் இயற்றப்பட்டது இந்நூல். இந்நூலை வெளியிடும் உரிமையை அளித்தவர் அவர் தம்புதல்வர் ஆரிபு நாவலர் அவர்கள். அவ்வுரிமையை எமக்குப் பெற்றுத் தந்தவர் ஹாஜி செ. முஹம்மது ஹனிபா, பி. ஏ. அவர்கள். அவ்விருவர்க்கும் எமது மனமார்ந்த நன்றி.

இந்நூலையும் வெளியிட எமக்குப் பொருள் உதவி புரிந்தோர் பிரபல மாணிக்க வியாபாரிகள் இருவர். ஒருவர் ஜனாப் எம். எஸ். எம். பளீல், இவர் இரத்தினபுரி நகரசபை உறுப்பினர். மற்றவர் வேர்விலை, சீனங்கோட்டையைச் சேர்ந்த ஜனாப் எம். எஸ். எம். முபாறக். இவர்கள் இருவருக்கும் சகல பாக்கியங்களையும் அல்லாஹ் அளிப்பானாக.

ம. முகம்மது உவைஸ்.

''மர்கஸி'',
ஹேனமுல்லை,
பாணந்துறை.
இலங்கை
1968–11–21

# குலாம் காதிறு நாவலர்

*1833 ம் ஆண்டில், குலாம் காதிறு நாவலர் நாகூரில் பிறந்தார். இவர் தந்தை பெயர் வாப்புராவுத்தர். அறபு, ஆங்கிலம், தமிழ் மொழிகளில் ஆர்வமுள்ளவராக விளங்கினார் நாவலர். தமது பெரியதந்தை புலவர் பக்கீர் தம்பி சாகிபின் வேண்டுகோட்படி, நாராயணசுவாமி உபாத்தியாயரிடம் பாடம் கேட்டுவந்தார். பின்பு, வித்துவான் மீனாட்சி சுந்தரப்பிள்ளை யிடமும் பாடம் கேட்டு வந்தார்.*

*மலாயா சென்ற புலவர் அவர்கள், அங்கு 'வித்தியாவிசாரிணி' என்ற பத்திரிகையை வெளியிட்டு வந்தார்.*

*1901 ம் ஆண்டு பாலவனந்தம் ஜமீன் பாண்டித்துரைத் தேவருடன் சேர்ந்து, மதுரையில் நான்காவது சங்கம் அமைத்தார். அச்சங்கத்தில் அரங்கேற்றிய ''மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவராற்றுப்படை'' இன்றும் இஸ்லாமியரின் தமிழ்ப் பணிக்கு எடுத்துக் காட்டாக உள்ளது. அன்று 'நக்கீரர்' என்னும் புகழ்ப்பெயரையும் பெற்றார்.*

*பிரபு மதுரைப் பிள்ளையின் தர்பாரில், புலவரின் நூலொன்று அரங்கேற்றப்பட்டது. அதில் புலவருக்கு ''நாவலர்'' என்று புகழ் நாமம் சூட்டப்பட்டது. நாவலரின் நூலொன்று யாழ்ப்பாணத்திலும் அரங்கேற்றப்பட்டது. அப்பொழுது சுலைமான் லெவ்வை ஆலிம், வித்துவான் பொன்னம்பலம்பிள்ளை மற்றும் பலரும் அதில் பங்குகொண்டனர்.*

அறபில் கடுமையான அச்சர வாக்கியங்களுக்கு நேரான தமிழ் மொழி கண்டு 'அறபுத்தமிழ் அகராதி' ஒன்றை நாவலர் சிறந்த முறையில் வெளியிட்டுள்ளார். இறுதியாக, குர்ஆன்ஷரீபு முப்பது ஜுஸுவுக்கு உரை எழுத வேண்டுமென்றும், நாவலர் பேரவாக் கொண்டிருந்தார். ஆனால், அவரின் நாட்டம் ஈடேறுமுன், 1908 ம் ஆண்டு ஜனவரி மாதம் 3 ம் திகதி இறைவனடி சேர்ந்தார். அது முஸ்லிம் தமிழ் இனத்துக்குச் சோக தினமாகும். அன்னாரின் புகழ் ஓங்க இறைவனை இறைஞ்சுவோம்.

## குலாம் காதிறு நாவலர் இயற்றிய நூல்கள்

நாகூர்ப் புராணம்
குவாலீர்க் கலம்பகம்
நாகூர்க் கலம்பகம்
முகாஷபாமாலை
கன்ஜுல் கருமாத்து
திருமக்காத் திரிபந்தாதி
சமுத்திர மாலை
பிரபந்தத் திரட்டு
மும்மணிக் கோவை
மதுரைக் கோவை
சித்திரக்கவித்திரட்டு
ஆரிபு நாயகப் புராணம்
சீறு வசன காவியம்
திருமணிமாலை வசனம்
உமறு பாஷா யுத்த சரிதை (நான்கு பாகங்கள்)
நன்னூல் விளக்கம்
பொருத்த விளக்கம்
பிக்ஹு மாலை உரை
தரீக்குல் ஜன்னா உரை
நபிகள் பிரான் நிர்யாணமான்மிய உரை
ஆரிபு நாயக வசனம்
பதாயிகுக் கலம்பகம்
அறபுத்தமிழ் அகராதி

# முன்னுரை

தமிழ் இலக்கியத்தில் தொண்ணூற்ருறு வகைப் பிரபந்தங்களுண்டு. அவற்றுள் ஆற்றுப்படையும் ஒன்று. ஆற்றுப்படை என்பது ஆற்றுப்படுத்தல் அல்லது வழிப்படுத்தல் என்ற பொருளையுடையது.

ஒரு புலவன் ஒரு கொடைவள்ளலிடம் செல்கின்ருன். சென்று பரிசில் பெற்று மீளுகின்ருன். திரும்பி வரும் வழியில் தன்னெதிரே இன்னெருரு புலவனைக் காண்கின்ருன். அவனும் பரிசில் பெற விரும்புகிருன். இல்லை யென்னுது அளிக்கும் கொடைவள்ளலைத் தேடியே அலைந்து திரிகின்ருன். இந்நிலையில் தான் இரு புலவரும் சந்திக்கின்றனர். பரிசில் பெற்ற புலவன் தான் பெற்றுவரும் மிக்க பரிசில் வளத்தை மற்றப் புலவனுக்கு எடுத்துக் கூறுகின்ருன். கூறித் தான் சந்தித்த புலவனை அக் கொடைவள்ளலிடம் செல்லுமாறு கூறுகின்ருன். வழிப்படுத்துகின்ருன். இங்ஙனம் வழிப்படுத்துகையில் அவன் வழி தவருது செல்லும் பொருட்டு வழியின் இரு மருங்கிலும் உள்ள சில, பல குறிகளைக் குறிப்பிடுகின்ருன். இயற்கைக் காட்சிகளைச் சுட்டிக் காட்டுகின்ருன். இவை போன்ற இன்னும் பல அறிகுறிகளை எடுத்தோதுகின்ருன். இவ்வாறு ஆற்றுப் படுத்தப்படுவோர் கூத்தர், பாணர், பொருநர், விறலியர், புலவர் முதலியோர் ஆவர்.

ஆற்றுப்படை இலக்கணங்கள் ஒருங்கே அமையப் பெற்ற பல நூல்கள் சங்க காலத் தமிழ் இலக்கியத்தில் காணக்கிடக்கின்றன. சங்ககாலப் பத்துப் பாட்டுள் ஐந்து, ஆற்றுப்படைகளாக அமைந்துள்ளன. தொகை நூல்களுள் ஒன்ருன புறநானூற்றிலும் ஆற்றுப்படைத் துறையில் பாடப்பட்ட பல செய்யுட்கள் மிளிர்கின்றன. எனவே தமிழ்ப் பிரபந்தங்களுள் ஆற்றுப்படை மிகப் பழமை வாய்ந்தது எனலாம். சங்க காலத்துக்குப் பின் ஆற்றுப்படை இலக்கணங்கள் அனைத்தும் ஒருங்கே அமையப் பெற்ற பாட்டுக்கள் தோன்றுவது அரிதாயிற்று. புண்ணியராற்றுப்படை, காதலி ஆற்றுப்படை போன்றவை பிற்காலத்திலே தோன்றியவையாம்.

இவ்வாறு, முஸ்லிம் புலவரால் இயற்றப்பட்ட ஆற்றுப்படை நூல் ஒன்று உண்டு. இது மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவ ராற்றுப்படை என்ற பெயரைப் பெற்றுள்ளது. பாண்டித்துரைத் தேவரினுல் நிறுவப்பட்ட நான்காம் தமிழ்ச் சங்கத்தையே இந்நூல் குறிப்பிடுகின்றது. மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்குச் சென்று சிறப் புப் பெயரும் பரிசிலும் பெறுகிருர் ஒரு புலவர். இவற்றைப் பெருத இன்னெரு புலவரைச் சந்திக்கிருர் அப் புலவர். சந்தித்த தும் சிறப்பும் பெயரும் பரிசிலும் பெறுமாறு கூறி இவற்றைப் பெருத அப் புலவரைச் சங்கப் புலவரிடத்து வழிப்படுத்தியுள்ளார். இதனுலேயே இந்நூல் புலவராற்றுப்படை எனப் படுவதாயிற்று.

புலவராற்றுப் படையில் குலாம் காதிறு நாவலர் சங்க காலத் தமிழ்க் கவி மரபுகளையே ஆண்டுள்ளார். தமிழ் மொழி யைப் பற்றிக் குறிப்பிடுகையில் தமிழ் என்ற சொல்லின் இனிமை யைப் பற்றிக் கூறுகிருர்.

தனிமை யென் பெயர்த்தா யினிமை யென் பொருட்டாய்

என்று 'தமிழ்' என்ற சொல்லில் பொதிந்துள்ள கருத்துக்களை விளக்குகிருர்.

தமிழ் மொழி அகத்தியருக்குச் சிவ பெருமானுல் போதிக்கப் பட்டது என்பது மரபு. இக் கருத்திணையே நாவலர் தமது புலவ ராற்றுப் படையில் பின்வருமாறு கூறுகின்றுர் :—

கங்கைச் சடைய னொரு பாக மங்கையன்
இமயப் பொதியத் தமர்முனி அகத்தியற்
காய்ந்து தர வுணர்த்திப் போக்க.

பாரி, காரி, ஆய், ஓரி, பேகன், நள்ளி, அதிகன் என்போர் கடையெழு வள்ளல்கள். அவர்கள் பழங்காலத்தில் கற்றுணர்ந்த மக்களின் அருமை இத்தன்மைத்து என அளவிட்டறியும் ஆற்றல் வாய்ந்தவர்களாய்த் திகழ்ந்தனர். உள்ளந் தகுதிபட அக் கல்வி யைத் தெரிந்து கொண்டனர். தெரிந்து பொன்னையும் இரத்தி னங்களையும் பலவாருக அளித்தனர். இவ்வாறு வரையாது கொடு த்து இவ்வுலகத்தின் கண் தம் புகழ் மங்காப் பெயர்களை நிலை நாட்டினர். நிலை நாட்டிவைத்து மறைந்து போயினர். குலாம் காதிறு நாவலர் உள்ளக் கண்கள் முன் இவர்கள் தோன்றுகின் றனர். தமக்கென ஒன்றும் வையாது கொடுத்த அத்தகைய வள்ளல்கள் இக்காலத்தில் வாழ்கின்றனர் அல்லர் என உள்ளம் உடைகின்றுர். எனவே உணர்ச்சி ததும்பப் பின்வருமாறு பாடு கின்றுர் :

கற்றுணர் மக்க ளருமை யிற்றென
வளந்தறிந் ததனை யுளந்தகத் தெரிந்து
முன்னாள் பொன்னு மணியுஞ் சிதறி
தம்பெயர் விட்டன ரிம்பரின் மாய்ந்த
பாரியுங் காரியு மாயு மோரியும்
பேகனு நள்ளியு மதிகனு மாகி
வரையாது கொடுத்தோர் வாணு ளிதன்று.

பாண்டி நாட்டின் தலைநகர் மதுரை. அது மிகப் பழமை வாய்ந்தது. அங்கே எழிலுறு காட்சிகள் கண்ணைக் கவரும் இயல்பை யுடையன. இவ் வியற்கைக் காட்சிகள் புலவராற்றுப் படையில் மிக நுணுக்கமாக விவரிக்கப்பட்டுள்ளன. அங்கே பூஞ்சோலைகள் உண்டு. அழகிய சிறகுகளையுடைய வண்டுகள் அப் பூஞ்சோலையில் இருக்கின்றன. அவ் வண்டுகள் பூக் கொப்புகளிலே வந்து தங்குகின்றன. தங்கிக் குழல் ஊதுகின்றன. மொட்டுக்களின் முறுக்கவிழச் செய்கின்றன. முறுக் கவிழ்ந்து பூக்கள் மலர்கின்றன. இவ்வாறு மலர்ந்த அழகிய பூக்கள் காம்பு கழன்று கீழே விழுகின்றன. விழுந்து சித்திரக் கம்பளத்தை விரித்தாற்போலத் தரையில் படர்ந்து விளங்குகின்றன. இத்தகைய வாசனை மிக்க பூஞ்சோலைகள் மதுரையில் மிக்கு இருக்கின்றன. இவை வையை யாற்றின் இரு பக்கத்திலும் ஒருங்குபட வளர்ந்து காட்சியளிக்கின்றன. ஆற்றின் கரையை அழகுபடச் செய்கின்றன. இத்தகைய உள்ளத்தை அள்ளும் காட்சிகள் நிறைந்து, செல்வம் மிகுந்து, மதுரை திகழ்கின்றது. இக் கருத்துக்கள் அனைத்தையும் மிகவும் நயம்பட அமைத்துப் பாடிய பகுதி பின்வருமாறு :

அஞ்சிறைத் தும்பி துஞ்சி யூதப்
பிணியவிழ் பலர்ந்து கழல்காம் பணிமலர்
வன்னக் கம்பளம் விரித்தாங் கன்ன
தரைபடர்ந் திமைக்கும் விரைகெழு பூம்பொழி
லிருமருங் கொழுகிய பொருகரை வையைச்
செந்தமிழ் நாட்டுத் திருத்தகு மூதூர்.

வண்டுகள் தங்கி ஊதலால் மொட்டுக்கள் முறுக் கவிழ்ந்து விரிந்து மலர்களாகின்றன என்பது சங்ககாலத் தமிழ்க் கவிமரபு. பத்துப் பாட்டுள் ஒன்ருன முல்லைப்பாட்டில்,

யாழிசை யின வண்டார்ப்ப
. . . . . . . . . நறுவீமுல்லை
யரும்பவி ழலரி . . . . . .   [8-10]

என்னும் கருத்துக்கள் வந்துள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கது.

சங்ககாலத்து ஆற்றுப்படை நூல்களில் இல்லாத பல கருத்துக்கள் புலவராற்றுப் படையில் ஆளப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று இப் புலவராற்றுப் படையின் ஒப்புயர்வற்ற தன்மையை வெளிப்படுத்துகின்றது. பழங்காலத்தில் ஆற்றுப்படுத்தப்பட்டவர்கள் பெரும்பாலும் கால்நடையாகவே சென்றனர். ஆனுல் குலாம் காதிறு நாவலர் வாழ்ந்த பொழுது ஓரிடத்திலிருந்து இன்னேரிடத்துக்குப் போகக் கால்நடையாகச் செல்ல வேண்டிய நிலைமை ஏற்படவில்லை. பலவகையான ஊர்திகளில் ஏறி அங்கும் இங்கும் சென்றனர். எனவே குலாம் காதிறு நாவலர் மற்றப் புலவரை ஆற்றுப்படுத்தும் பொழுது இத்தகைய ஓர் ஊர்தியில் செல்லுமாறு பணிக்கிருர். குலாம் காதிறு நாவலர் அத்தகைய எந்திர ஊர்தியைப் பின்வருமாறு வர்ணிக்கிருர் :

உரு முறுமோ டுறழொலியி
னிரு புறனு மிருப்புருளை
நான் குருளக் கான்குழுமும்
வாஅய்க்கொள்ளிப் பேஎயுயிர்ப்பி
ஞெலித்துமிழுங் கலித்தூமங்
குழல்வாயிற் சுழல் கொள்ள
மரவட்டைச் செலவொப்பச்
செல்பாண்டில் பல்கோத்த
நெடுத் தொடரி னிரை நீண்டு
கடுங் காலிற் கழிவிசையி
னெந்திர வூர்தி.

இது நாம் எப்பொழுதும் காணும் எந்திரவூர்தியாகும். இடியின் முழக்கத்தோடு மாறுபடுகின்ற ஓசையை உடையது. இவ் வோசையை உண்டாக்குவது இரும்பு உருளைகள். அவ்வுருளைகள் நான்கு நான்காக இரண்டு பக்கத்தும் அமைந்திருக்கின்றன. அவை உருள எந்திரவூர்தி இயங்குகின்றது. அவ் வெந்திரவூர்தி ஒலிக்கும் பொழுது அது கொள்ளிவாய்ப் பேய்களின் மூச்சை யொத்திருக்கின்றது. இவ்வாறு ஒலிக்கும்பொழுது எந்திரம் மிக்க புகையைக் கக்குகின்றது. இப்புகை குழலின் வாயில் சுழன்று கொண்டு இருக்கும். எந்திரவூர்தியின் நடையோ வென்ருல் மரவட்டையின் நடையைப் போன்றே இருக்கும். மரவட்டையின் நடையைப் போன்ற வண்டில்கள் பலவற்றைச் சேர்த்த நெடிய தொடரினை உடையது. நிரை யாயுடையது. மிக நீண்டுள்ளது. மரவட்டையின் நடையையுடைய வண்டில்கள் சேர்க்கப்பட்டாலும் கடுமையாக வீசுகின்ற காற்றைப்போல ஓடுகின்ற எந்திர வூர்தியாயிருக்கும். இவ்வடிகளில் புகைவண்டியே வருணிக்கப்பட்டுள்ளது.

மதுரைத் தமிழ்ச் சங்கத்துள் நிறுவப்பட்டிருக்கும் அச்சகம் எவ்வாறு இயங்குகின்றது என்பது இவ்வாற்றுப் படையில் குறிக் கப்பட்டுள்ளது. அச்சகத்தில் தமிழ், சங்கதம், ஆங்கிலம் ஆகிய எழுத்துக்கள் இருக்கின்றன. அவ்வச்செழுத்தின் கீழ்க் கட்டை யைத் தமக்காதாரமாகக் கொள்ளும்படி வார்க்கப்பட்டுள்ளது. வெவ்வேறு பகுதிகளாகச் செய்யப்பட்டுள்ளது. பல பிரதிகள் இயற்றக்கூடிய ஆற்றல் அவ் வச்சகத்துக்கு இருந்தது. ஒரு பிரதி பல பிரதிகளாய் எங்குஞ் சென்று பொருந்தப் பதிப்பிக்கும் அச்சுச் சாலையாகும்.

தென் மொழி யெழுத்தொடு வடமொழி யெழுத்து
மீங்கு நனி பாய வாங்கிலாக் கரமுங்
கால்கொள வாக்குபு பால்வேறு படுத்தி
யொன்று பல வாகிச் சென்றுறப் பதிக்கு
மச்சுச் சாலையும்

என்ற அடிகளில் அச்சகத்தைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் அளிக்கப்படும் பட்டங்கள் பரிசில்கள் பலவும் குறிக்கப்பட்டுள்ளன. பொன் மோதிரம், பொழுதறி கருவி, காசுமீரமாகிய போர்வை, பணம் முதலியன அத்தகைய பரிசில்களாம். இப் பரிசில்களைக் கூறும்பொழுதும் மிக நுண்ணிதாக அவற்றை விளக்குகின்றார் ஆசிரியர்.

இவ்வாற்றுப்படை பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி யில் இயற்றப்பட்டதாயினும் பழங்கால ஆற்றுப்படைகளைப்போல் சொல்நயம், பொருள்நயம் அமைந்துள்ளது. இக்கால வழக்கி லுள்ள சில கருத்துக்களைக் குலாம் காதிறு நாவலர் தமது புலவ ராற்றுப்படையில் அமைக்காமல் பாடியிருப்பாரேயானால் இவ் வாற்றுப்படையையும் பழங்காலத்தைச் சேர்ந்தது என்றே படிப் போர் எண்ணுவர். நடையும் பெரும்பாலும் சங்ககால ஆற்றுப் படை நூல்களின் நடையையே ஒத்துள்ளது. சொற்சுவை, பொ ருட் செறிவு பொதிந்த இப் புலவராற்றுப்படை தமிழ் மக்கள் படித்து இன்புற வேண்டிய ஒரு நூல் எனின் அது மிகையாகாது.

ம. மு. உ.

# பதிப்பாசிரியரின் நூல்கள்

1. முஸ்லிம்கள் தமிழ் இலக்கியத்துக்கு ஆற்றிய தொண்டு (ஆங்கிலம்)
2. இஸ்லாமியத் தென்றல்
3. நம்பிக்கை
4. வாய்மையின் வெற்றி
5, ஞானச் செல்வர் குணங்குடியார்

**சிங்களத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்த நூல்கள் :**

6. இலங்கையின் பொருளாதாரத் திட்டம் (லங்கா ஆர்த்திக்க ஸலஸ்ம)
7. பிரித்தானிய அரசியல் யாப்பு (பிரித்தான்ய ஆண்டு கிரமய)
8. பொருளியற் பாகுபாடு (ஆர்த்திக்க விக்கிரகய)
9. கிராமப் பிறழ்வு (கம்பெரலிய—ஒரு நாவல்)

**தமிழிலிருந்து சிங்களத்துக்கு மொழிபெயர்த்த நூல்கள் :**

10. வாணிஜ அங்க கணிதய (வர்த்தக எண் கணிதம்)
11. மாநபி ஸிரித்த (நபிகள் நாயகம்—அப்துற் றஹீம்)

**உரை நூல்கள் :**

12. குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணம்
13. இராஜநாயகம்

**பதிப்பித்த நூல்கள் :**

14. ஆசாரக்கோவை—அப்துல் மஜீதுப் புலவர்
15. பெருமானார் பெருவாழ்வு

மதுரைத்

தமிழ்ச் சங்கத்துப்

# புலவராற்றுப்படை.

பரிதிவெயி லெறிக்கும் விரிவுறு வெளிக்கீழ்
விளங்கனி நின்றுங்கு நின்று துளங்கிய
மருணீர் மணியென வுருணீ ரும்ப
ரடர்ந்துமண லாடையிற் படர்ந்தன் முகலிற்
கருங்கடற் றெனுமிவ் விருங்கண் ஞாலத்துப்
பரத கண்டம் பண்ணிய விரதந்
தனிமையென் பெயர்த்தா யினிமையென் பொருட்டா
யுத்தர மொரீஇத் தக்கணம் போந்தெனக்
கங்கைச் சடைய னொருபாக மங்கையன்
சிமயப் பொதியத் தமர்முனி யகத்தியற்
காய்ந்துதர வுணர்த்திப் போக்கப் போந்த
வோர்ந்துணர் மாந்தர்க் களிக்கு மீர்ந்தமிழ்
முழுதுணர் சிறப்பிற் பழுதுதீர் புலவ
வொன்றுநின் னுள்ளங் குன்றுதக விரியக்
கேளா யத்தை கிளக்குவல் வாளா
மன்னிய வொருநீ யன்ன யானும்
பொருந்துறு புகழி னருந்தமிழ் நசைஇ
மதனுடை முந்துநூ லதன்வழிப் பட்ட
தொல்காப் பியமுதற் பல்காப் பலவென
விலக்கணந் தெரிக்கும் விலக்கினூ றேர்ந்து
பொற்புறு மெழுத்துச் சொற்பொருள் யாப்பு
விழுமிய வகையி னணியிவை பழுநி
யெஞ்சலில் சீர்த்திப் பஞ்சகா வியம்பிற
வெட்டுத் தொகையொடும் பத்துப் பாட்டொடு
மின்பமர் கீழ்க்கணக் கொன்பதிற் றிரட்டியெனச்
சங்க மரீஇய பொங்குநூ றேற்றி
மறையில் கேள்வித் துறைபல் போகிப்
பாவினம் யாத்தற்கு வாய்வளங் கூர்ந்தனன்
கற்றுணர் மாக்க ளருமை யிற்றென

வளந்தறிந் ததனை யுளந்தகத் தெரிந்து
பொன்னு மணியு முன்னாட் சிதறித்
தம்பெயர் விட்டன ரிம்பரின் மாய்ந்த
பாரியுங் காரியு மாயு மோரியும்
பேகனு நள்ளியு மதிகனு மாகி
வரையாது கொடுத்தோர் வாணா ளீதன்
றரையருந் தமிழ ரல்ல ராகலி
னற்றமிழ் மாட்சியுங் கற்றவர் மாட்சியும்
புரிந்துளங் களிப்பத் தெரிந்தாங் கருண
ரில்லென் கவற்சியிற் புல்லென் முகன்கண்
டுடுக்கையு முண்டியு மிருக்கையு முசாஅய்க்
கொடுக்குநர் யாரென் றடுக்குமவர் கரப்பக்
குன்றுவரு நெஞ்சின னின்றன னுழந்தே
கற்றவர் கல்லா மற்றவ ரிவரெனத்
தெற்றெனப் படாஅ வகையிற் றாகிக்
கண்ணின் மாக்கண் முன்ன ரெண்பட
வியன்மணி நிரையிற் செயன்மணி விராஅய்க்
கிடந்திமைத் தாங்கு மடந்தகழ் பவர்மு
னிருவருந் தகைமையி னொருவரெனக் கலாவி
யறியா ரென்னாப் பெருஞ்சுட் டுறீஇப்
போலிப் புலமையர் திரியுமிக் காலத்துப்
புனைநூ லுணரா வனைய ரானு
நறவோர் வாழ்க்கைப் பறவையின் விழைஇ
யருங்கலை பலவு மொருங்குடன் றுரீஇ
நன்மையிற் பயிலுந ரின்மை யானும்
பயிலுநர் சிலரே யாகிப் பயில்வுழிப்
புரத்தன் மாலையர் கரத்த லானு
நன்றுறு தமிழ்வளங் குன்றுதக வுணர்ந்து
பண்டையிற் சிறந்தது தழைப்பக் கொண்டு
வானம ரதனை வளர்ப்பல் யானென
வஞ்சிறைத் தும்பி துஞ்சி யூதப்
பிணியவிழ் பலர்ந்து கழல்காம் பணிமலர்
வன்னக் கம்பலம் விரித்தாங் கன்ன
தரைபடர்ந் திமைக்கும் விரைகெழு பூம்பொழி
லிருமருங் கொழுகிய பொருகரை வையைச்
செந்தமிழ் நாட்டுத் திருத்தகு மூதூர்
பைந்தமிழ் வளர்த்த பாண்டிய ரிருக்கை
நடைமாண் புரவியுந் தொடைமான் றேரும்
பணையிரு கோட்டி னிணையெருது பிணித்த
பாண்டிலுஞ் சிவிகையுஞ் சிறுகண் யானையுங்

கூண்டினி தொழுகுங் குறையின் மறுகுதொறுங்
கூடம் போன்ற கோபுர நிரையொடு
மாடஞ் சான்ற மதுரைமா நகர்க்கண்
முந்திய சங்க மூன்றொன் றாகிப்
பிந்திய சங்கம் பிறந்த தாலெனத்
தண்டமிழ் விரிக்கும் பண்டைநூ லெழும்ப
வியனனி விழைகுநர் குழீஇனர் பயில
மால்செய் கல்வியர் மாண்பி னூல்செய
வுரைகாண் வல்லுநர் வரைகாண் டெழுத
முறைபிறழ்ந் துற்ற குறைபல் காண்மார்
முதுநூ றேண்டிப் பழுதாய்ந் தமைக்கக்
குற்றம் போகிய கற்றன கெடாஅப்
பேணூஉ வைகுமோர்ப் பரிக்கை காணூஉச்
சிறப்புப் பெயரொடு பரிசிலு மளிப்பப்
பின்னும் வேண்டுவ வென்னவும் புரிய
மங்கலி லருந்தமிழ்ச் சங்கமொன் றிரீஇனன்
குமரிமருங் குற்ற நிமிர்திரை முரியுஞ்
சேது காவலர் திறற்குடிப் பிறந்தோன்
றீதுதீர் வாழ்க்கைத் தென்புலங் காப்போன்
மறங்காண் பகைவர் வணங்கிய புறங்காண்
மஞ்சுவரு மேற்றி னஞ்சுவரு திறலினன்
புலவர் வம்மின் பொருநர் வம்மின்
பலர்புகழ் கூத்தரும் பாணரும் வம்மின்
போராக் கதவதிப் புரவலன் வாயிலென
வேரார் வான்கொடி நுடங்குபு நுடங்கி
யகவையம் மாடத்து முகவை யூரன்
மேலறி வுயர்ந்த நூலறி புலவன்
முத்தம் விளைவயற் பாலவ னத்த
நாடுசெகிற் கொண்டு பீடுகெழு குடிதழீஇ
முற்றக் காக்குங் கொற்றக் குடையினன்
விரைகமழ் கண்ணியன் பாண்டித் துரையெனக்
கேட்டனெ னன்றே கெட்டதென் கவற்சி
வேட்டன வடைதல் விளிவுறு தாலெனக்
கதுமென வெழூஉச் சினைகொள் புதுமலர்
வண்டுந் தேனு முண்டன களிப்ப
நறவிருந் தளிக்கும் புறவுறழ் சோலை
வளனற வறியா மல்லலம் முதுநகர்
மாண்புறப் புகூஉக் காண்பன கண்டு
செந்தமிழ் விளங்குமச் சங்கம் போஒய்
நல்லிசைப் புலவர் சொல்லிசை பரப்பக்

கூண்டினி திருக்கு மவைக்களங் குறுகி
யாண்டியான் யாத்த கவியரங் கேற்றி
யுலகுசொல் சிறப்புப் பெயரொடு பெருஅ
வரிசை யான்ற பரிசிலும் பெறூஉ
வந்தனென் யாஅரெனக் கண்டறிந் தவரே
நீயிருஞ் செல்விய ராண்டுப் பலபெற
மேயினி ரெனினே யின்னே விட்டிவட்
காலிற் செல்லி ஞளிற் செல்லு
முருமுறுமோ டுறலொழியி
னிருபுறனு மிருப்புருளை
நான்குருளக் கான்குழுமும்
வாஅய்க்கொள்ளிப் பேஎயுயிர்ப்பி
ஞெலித்துமிழுங் கலித்தூமங்
குழல்வாயிற் சுழல்கொள்ள
மரவட்டைச் செலவொப்பச்
செல்பாண்டில் பல்கோத்த
நெடுந்தொடரி னிரைநீண்டு
கடுங்காலிற் கழிவிசையி
னெந்திர வூர்தி யிவர்ந்தனிர் படர்மி
னந்தமில் காட்சி யணிபல காண்பிர்
வீறிய மாக்க ளேறிறங் கிடன்றொறு
மூறிய வமிழ்தி னுண்டிபல் பெறுகுவிர்
பன்ஞு ணடந்தனிர் மன்ஞு தெய்க்குங்
காலுழப் பறியா மாலுறு செலவின்
மலைப்புறு நெடுவழி யொருநா டொலைச்சிச்
சூடிய நறுமலர் வாடிய லுருமு
னிதிமலி கூடலம் பதிவயிற் புகுவி
ராவயிற் போந்து கூரயி லேந்திய
முடியுடை வழுதியர் முறைவழி யிருந்த
கொடிநுடங் கெயிலிற் கோயின் மறுகு
மாலய வீதியு மாவண வீதியு
மறிந்தவர் வியக்கு மாண்மையர் மலிந்து
செறிந்தமர் தெருவுந் திருவொடுங் காண்பிர்
கண்டனிர் பின்றைத் திண்டிறற் புலவர்
கூடுறு சங்க நாடினிர் செலினே
யாயிரங் கதிர்கொள் பருதி ஞாயிறு
திருந்துவரைச் சிகர மீமிசை யிருந்தெனக்
கரும்பனைக் கையின் வேழத் தொருவெரி
நுவவு மதிவட்டத் தவவில்குடை நிழற்ற
வருமிறை யிவனெனப் பொருவறு விதியி

ஙரப்புவகை பிழையா நான்குவகை பரப்பிய
யாழிற் பாண ரேழிற் பாட
விரண்டுபத் தடுக்கி யொன்றுகடை வைத்த
வண்மைய ரொருவடி வண்மின ரெடுத்தென
வான்கவி வாணர் நான்கிற் பாடப்
பொன்முடி கவித்து வென்வே லேந்திப்
பாண்டிநா டளிக்கும் பண்பி னுண்டகை
யிரவலர்க் கடையா வாயிற் புரவலன்
கோதுபதி யொடுக்கும் பாற்கர சேதுபதி
யருளொடு நிலைஇயர் பொருணனி யுதவ
வன்னவன் பெயரொடு மன்னுபெயர் கொண்டு
சங்க மேவுமோ ரங்க மாகி
யூணுடை யேனைய மாணவர்க் கார்த்தி
நல்லா சிரியர் பல்லோர் வைகினர்
தொன்னூ லொருசிறை யொருசிறைப் பின்னூ
லோவிறந் துணர்த்துந் தாவில் கொள்கை
யழகமர் காட்சிக் கழகமுங் காண்பி
ரிலக்கியத் தனவு மிலக்கணத் தனவு
மலக்கண் டீர்க்கு மாகமத் தனவுமென
முதியவு மான்ற முறைமையி னமைந்த
புதியவு மாகிப் பொலிந்துற்று நசைஇ
யோரு மாக்க ளுள்ளந் தேரும்
பாண்டியன் சுவடிச் சாலையுங் காண்பிர்
தென்மொழி யெழுத்தொடு வடமொழி யெழுத்து
மீங்குநனி பாய வாங்கிலாக் கரமுங்
கால்கொள வாக்குபு பால்வேறு படுத்தி
யொன்றுபல வாகிச் சென்றுறப் பதிக்கு
மச்சுச் சாலையு மெச்சக் காண்பிர்
கண்டனிர் சங்க மண்டபம் புகினே
தீந்தமிழ்ப் புணரி மாந்திய மக்களும்
வடமொழி தேர்ந்து திடமுறு பவரு
மாங்கிலம் பயின்ற பாங்கரு மாகிப்
புரையறு நூல்கட் குரைசெய் குநரு
நால்வகை பயக்கு நூல்செய் குநரு
மோரா முதுநூ லாராய் குநருமெனப்
பெரும்புலவர் மருங்கமர
மண்டுடுவில் வெண்டிங்களுந்
தரங்காட்டி யரங்கேறிய
பயில்சிறப்புப் பெயரெய்திய
வறப்பரிசி லுறக்கொள்ளிய

நிலைபயிலுங் கலைபயிலிய
தவமலியு மவர்நடுவட்
கருங்கடலிற் செஞ்ஞாயிறும்
பொரத்தலைமை கொளத்தவிசில்
விரைப்பாண்டித் துரைத்தேவ
ஞற்றல்சால் சிறப்பி னுங்கவீற் றிருக்குங்
காட்சி கண்டனிர் களித்தனி ரண்மின்
மாட்சியி னவனே மலர்ந்த முகத்தினன்
யாரை நீயிரென விஞவு மோரையிற்
போந்தனென் பெருமநின் னவைக்கள மோர்ந்தெனின்
வருகெனத் தழீஇ யிருக்கென வருகிரீ இப்
போற்றினிர் சென்றநுங் கவியரங் கேற்று
நச்சியாங் கிருக்குந ருளப்பட மெச்சி
வாயரும் புலவன் பெருங்கவி ராயன்
பாவலன் வித்துவா னியறெரி நாவல
னென்றுயர் பெயர்களு மொன்றுற நுமக்குக்
களிவர நல்கி யூர்கோ ளொருதலை
மீனிருந் தென்ன வானிற வயிர
மின்செய் தொளிறும் பொன்செய் யாழியும்
பொலந்தகடு குழித்துப் பொற்புற வமைத்த
வலந்த பொற்றொடரின் மாண்பிற் றுகிப்
பழுதறச் சமைந்த பொழுதறி கருவியு
நொய்ம்மயி ராய்ந்து துய்யென நெய்த
மின்னிவர்ந் தென்ன பொன்னிழை நுழைத்த
மாசுகெடச் சிறந்த காசு மீரமும்
விழுத்தலை யமைந்த கழுத்தள வரையன்
பணயம் பலவு மிணையறத் தரீஇப்
பெருகிய மகிழ்விற் பேணுபு விடுக்கும்
வருகுவிர் மாதோ வளமலி தன்மையிற்
செம்பொன் பழுநிய செழுமரன்
வம்பொடும் பொலிந்து வந்ததா லெனவே.

---

## இதன் பொருள்

புலவரிடத்து ஆற்றுப்படுத்தலானே இது புலவராற்றுப்படை யெனவாயிற்று; முருகாற்றுப்படை என்றாற்போல. எனவே, மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரிடத்துச் சென்று சிறப்புப் பெயரும் பரிசிலும் பெற்றானொரு புலவன் அவை பெறாதானொரு புலவனுக்குப் பெறுமாறு கூறி, அவனை அவரிடத்து வழிப்படுத்தியதென்பது இதன் பொருள்.

புலவனையாற்றுப்படுத்துக் கூறுமாற்ருனே புலவராற்றுப் படையென வாயிற்றென்ருலோவெனின் ; — புறப்பொருள் வெண்பாமாலைப் பாடாண் படலத்து ''பாடாண்பாட்டே'' என்னுஞ் சூத்திரத்தில் ''அமரர்கண் முடியு மறுவகை யாகிய, கொடிநிலை கந்தழி வள்ளி குணஞ்சால், புலவரை யவர்வயிற் புகழ்ந் தாற்றுப் படுத்தல், புகழ்ந்தனர் பரவல் பழிச்சினர் பணித, னிகழ்ந்த காமப் பகுதியுட் டோன்றிய, கைக்கிளை வகையும்'' என்புழிப் புலவரையவர் வயிற்புகழ்ந்தாற்றுப்படுத்தல் என்பதற்கு ''அருங்களவானத் தமரர்வயிற் பெரும்புலவனை யாற்றுப்படுத் தன்று'' என்பதாற், கந்தழிவேண்டினுெருவ புலவனை அமர ரிடத்து ஆற்றுப்படுத்தலே புலவராற்றுப்படையாமாகலின், அது பொருந்தாதென்க. அல்லதூஉம் அது ''அமரர்கண் முடியு மறுவகை யானும்'' என்னுந் தொல்காப்பியப் புறத்தி ணையியற்சூத்திரத்துப் போந்த பாடாண்டிணைக்கட் டெய்வப்பகுதியுளடங்கியது. இது ''கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு, மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெருஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்'' என்னும் மக்கட் பகுதியுளடங்கிய செந்துறைப் பாடாண்பாட்டெனக் கொள்க.

பரிதி வெயில் எறிக்கும் விரிவு உறு வெளி கீழ் விள கனி நின்று ஆங்கு நின்று - ஞாயிறு தன்வெயிலை யெறிக்கின்ற விரிந்த ஆகாயத்தின் கண் விளம்பழமொன்று நின்ருற்போல நின்று,

இக்காட்சி பகற்காலத்துக் காண்டலென்பது போதர வெயி லெறிக்கும் வெளியென்ரும் . கீழ்-ஏழாவது. ''நிழற்கீழ்'' என்ருர் பிறரும். இவ்வாதாரமருவாயும், ஆதேயமுருவாயு நின்றன; ''ஆகாயத்திற் பருந்து'' என்பதுபோல. நின்ருலென்னும் வினையெச்சம் நின்றென நின்றது. மேல் வருவனவுமன்ன.

துளங்கிய - விளங்கின,

மணி என மருள் நீர் உருள் நீர் உம்பர் - நீலமணியென்று மருளுநீர்மையினையுடைய உருண்ட நீரின்மேலே,

உருணீர் - கடல். நீரினியற்கைவடிவம் உருட்சியாகலின், உருணீரென்ரும். அது படைப்புக்காலத்து ஆகாயத்தின் கண்ணுருண்டு நின்றதாகலின்.

மணல் அடர்ந்து ஆடைஇல் படர்ந்தன்று - மணல்கணெருங் கிப் பாலாடையொப்பப் படர்ந்தது இப்பூமி,

படர்ந்தன்றென்னும் வினைமுற்றுப்பெயர் வினைமுதற் பொருட்டு. இதனைக் கர்த்தாவான கிருதந்தமென்பர் வடநூலார்.

ஆகலின் - ஆதலால்,

கரும் கடற்று என்னும் இவ் இரும் கண் ஞாலத்து - கரிய கடலினையுடையதென்னும் இந்தப் பெரிய விடத்தினை யுடைய பூமியின்கணுள்ள,

கடலானதுருண்டை யென்பதும், அதன்மேற் படர்ந்த மணற்கூட்டமே பூமியென்பதும் எம்மோத்து.

பரதகண்டம் பண்ணிய விரதம் - கண்டங்கள் பலவற்றுள்ளும் பரதகண்டம் நோற்ற நோன்பு,

தனிமை என் பெயர்த்து ஆய் இனிமை என் பொருட்டு ஆய் - ஒப்பின்மையென்னும் பெயரையுடையதாய் இனிமை என்னும் பொருளையுடையதாய்,

என்றது தமிழை. அது, தனிமையைக் குறிக்குந் தமியென்னும் வினையடியாற் பிறந்து, வினைமுதற் பொருண்மையை யுணர்த்தும் விகுதி குன்றி, இமிழ், உமிழ், கமழ் என்பனபோல ழகரப் பேறு பெற்றுத் தமிழென நின்ற தென்பவாகலின், தனிமையென் பெயர்த்தா யென்றும், தமிழென்னும் பெயர்க்குப் பொருள் இனிமையென்பவாகலின், இனிமையென் பொருட்டாயென்று முறைத்தாம். ''தமிழ் தழிய சாயலவர்'' என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளில் தமிழை இனிமையென்றார் நச்சினார்க்கினியரும்.

உத்தரம் ஓரீஇ தக்கணம் போந்து என - வடதிசையை நீங்கித் தென்றிசைக்கு வந்தாற்போல,

கங்கை சடையன் மங்கை ஒரு பாகன் - கங்கையையுடைய சடையை யுடையவனாகிய மங்கையை ஒரு பாகத்தேயுள்ளவன்,

என்றது சிவனை. மங்கை-உமை. சடையனென்னுங் குறிப்பு முற்றுப் பெயரெச்சமாய் நின்றது. ஒருபாக மங்கையனென்றது பொருத்தமில் புணர்ச்சி. ''உயர்கொடிச் சேவலோயே'' என்றார் பிறரும். இதனை விகுதி பிரித்துக் கூட்டுதலென்பர் பிரயோக விவேக நூலார்.

சிமயம் பொதியத்து அமர் முனி அகத்தியற்கு ஆய்ந்து தர உணர்த்தி போக்க - உச்சியையுடைய பொதியமலைக் கண்ணமர்ந்த

முனிவனுகிய அகத்தியனுக்கு அதையவனுராய்ந்து உலகத்திற்குத் தரும்படி போதித்துப்போக,

வடமொழியைப் பாணிநிக்கு வகுத்துரைத்துத் தென்மொழி யைக் குடமுனிக்கு வற்புறுத்தார் கொல்லேற்றுப்பாகர் என்பவா கலி னிங்ஙன முரைத்தாம். ''சிறப்பி ஞகிய பெயர்நிலைக் கிளவிக்கு மியற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்' ஆகலின் முனியகத்திய னென்றும். இதனை விசேடிய பூர்வபத கருமதாரயனென்பர் பிர யோக விவேக நூலார். ''கடிசொல்லில்லை'' என்பதனுன், அகத் திய முனியென விசேடியோத்தர பதமாக்கிக் கூறினு மமையும்.

போந்த - வந்த,

ஓர்ந்து உணர் மாந்தர் களிக்கும் ஈர் தமிழ் முழுது உணர் சிறப்புஇன் பழுதுதீர் புலவ - ஆராய்ந்தறியும் மனிதர்களைக் களிப்பிக்குந் தண்ணிய தமிழ் முழுவதையு முணர்ந்த சிறப்பினை யுடைய குற்றமற்ற புலவனே !

களிப்பிக்குமெனற்பாலது களிக்குமென நின்றது. இதனை அந்தர்ப்பாவிதணிச்சென்பர் வடநூலார்.

நின் உள்ளம் குன்று தகவு இரிய ஒன்று கிளக்குவல் கேளாய் அத்தை - நினதுள்ளங் குன்றுந் தன்மைகெட வொன்று சொல்லு கிறேன் நீ கேட்பாயாக;

அத்தை - முன்னிலையசை,

வாளா மன்னிய ஒரு நீ அன்ன யானும் - வீணே நிலைபெற்ற ஒருவனுகிய நின்னைப்போல நானும்,

நின்னையன்னவென நிற்றற்பாலது நீயன்னவென நின்றது. இதனைவ் திரிந்ததன்றிரிபென்பர். ''பாங்கனை யானன்னபண் பனை'' என்னுந் திருக் கோவையாரில் யானன்னவென்பதற்கு என்னையொத்தவெனப் பொருள் கூறினுர் நச்சினுர்க்கினியரும்.

பொருந்து உறு புகழ் இன் அரும் தமிழ் நசைஇ - மிகப் பொருந்தின புகழினையுடைய அரிய தமிழை நச்சி,

பொருந்தலு முறுதலு மொருபொருளனவாகலின், ஒன்று மிகுதி குறித்துநின்றது.

